பட்ட தம் ஊரில் வாழ வகையின்றி, மக்கள் வேறிடம் தேடிச்சென்று விடுவர்; அதனால், அவர் போற்றிவளர்த்த மன்றப் பாவைகள் பாழுறும்; மழை, பாவையின் வடிவினைச் சிதைக்கும்; வெயில், அதன் நிறத்தினை அழிக்கும்; இவ்வாறு, மக்கள் வாழ்விழக்க, மன்றப் பாவைகள் பாழான காட்சியினைக் கண்டு கலங்கிய புலவர் வேம்பற்றூர்க் குமரனார், அவ்வாறு பாழான பாவையைத் தலைவனைப் பிரிந்தமையால், வண்ணமும், வடிவமும் சிதைந்து வேறுபட்டுத் தோன்றும் தலைமகள் ஒருத்திக்கு உவமை காட்டித் தம் உள்ளத்துறு துயரை உணர்த்தியுள்ளார்:

"முனைபுலம் பெயர்த்த புல்லென் மன்றத்துப்
பெயலுற நெகிழ்ந்து, வெயிலுறச் சாஅய்
வினையழி பாவையின் உலறி
மனை யொழிந் திருத்தல்." (அகம்: கடுள)

வேம்பற்றூர்க் குமரனார் பாடிய வல்லாண் முல்லை தழுவிய பாட்டொன்று புறநானூற்றில் உளது; அவ்வொரு பாட்டும், பொருள் தோன்றாவாறு சிதைந்து காணப்படுவதால், செய்யுள் நலத்தினைச் சிறக்க உணர முடியவில்லை. அதில் காணப்படும் ஒரு தொடர், அக் கால மக்கள், புலித்தோலையும், பாயையும் தம் படுக்கைக்குரியனவாகக் கொண்டிருந்தனர் என்பதை உணர்த்துகிறது.

தம்பால் வந்து பொருள்வேண்டி நிற்பார் யாவர்க்கும், அவர் விரும்புவன அளித்துப் போற்றும் கொடையினரும், கள்ளுண்பராயின், அறிவிழந்து, தாம் படுத்தற்காம் இடம் இது; தாம் படுத்தற்காகா இடம் இது எனப் பகுத்துணரும் உணர்விழந்து, மனைமுன்றிற்கண்ணும் வீழ்ந்து உறங்கிவிடுவர் எனக்கூறிக் கள்ளுண்டு களிப்பாரைப் பழித்துரைக்கின்றார் புலவர் குமரனார்.

வந்து,
முன்றிற்கிடந்த பெருங்களி யாளற்கு
அதள் உண்டாயினும், பாய் உண்டாயினும்
யாதுண் டாயினும் கொடுமின்.......... (புறம்: ௩௨௰)

